REGD; No; TN MS (G) 244 ANNA (Tamil-Daily) MADRAS Phone: 842818 4 பக்கம் விலை 30 காசு

**பகட்டு**

சர்வாதிகாரமும், கொடுங்கோன்மையும் பூண்டோடு கருவறுக்கப்பட்டாகவேண்டும். பகட்டும், வெற்றுரைகளும், உளமொன்று வைத்துப் புறமொன்று பேசிடும் பொல்லாங்கும் அழிந்திடல்வேண்டும்.

— பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**இனிமை**

நாக்கிற்கு இனிமை தரும பொருள்களை நான் விரும்புவதில்லை; மனதிற்கு இனிமை தரும பொருள்களையே நான் விரும்புகிறேன்.

— அண்ணல் காந்தி

மலர்: 1 சென்னை 2—8—1977 செவ்வாய் வெளியூர் 3—8—1977 புதன் இதழ்: 288

புதிய கல்வி திட்டத்தால்

## "ஆசிரியர்கள் வேலை இழக்க அனுமதியோம்"

**அமைச்சர் அரங்கநாயகம் தகவல்**

சென்னை, ஆக. 2—புதிய பாட திட்டத்தால் ஆசிரியர்கள் வேலை இழக்காதபடி அரசு பார்த்துக் கொள்ளும் என்று சட்டசபையில் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்தார்.

சட்டசபையில் இன்று ஈஸ்வரமூர்த்தி கொண்டு வந்த கவன சர்ப்புத் தீர்மானத்திற்கு பதிலளித்து அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது:

பத்தாண்டு பள்ளிப் படிப்பு அடிப்படையிலான புதிய பாடத் திட்டம் தமிழகப் பள்ளிகளில் 1972—73-ம் ஆண்டு முதலே படிப்படியாக செயல்படுத்தப்பட்டு 1976—77-க்குள் 1-முதல் 10 வகுப்புக்கள் வரை பின்பற்றப்பட்டு நடைமுறைக்கு வந்து விட்டது. 1977—78-ம் ஆண்டு பத்தாம் வகுப்புக்கு வந்துள்ள மாணவர்கள் 10 ஆண்டு பள்ளிப் படிப்பு படித்து வெளிவரும் முதல் தொகுதியினராக இருப்பவர்கள் 1978 மார்ச் திங்களில் 10 ஆண்டு எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்வு எழுதுவார்கள். அவர்கள் 1978—80ல் 2 ஆண்டு மேல்நிலைப் பள்ளி படிப்புப் படிப்பார்கள்.

புதிய பாடத் திட்டத்தை அமல்படுத்துவதைத் தொடர்ந்து தற்போது 11-ம் வகுப்பில் பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள் தக்க கல்வி தகுதியுடையோரை மேல்நிலை வகுப்புக்கு நியமிப்பது குறித்து அரசு ஆலோசிக்கும்.

மற்றவர்களை பொருத்தவரையில் ஆண்டு வரம்பு மாற்றத்தினால் எவரும் பாதிக்கப்படாதபடி பள்ளிக் கல்வித் துறை பார்த்துக் கொள்ளும்.

எந்த ஆசிரியர்களும் வேலை இழக்காதபடியும் இடமாற்ற முடியும் பார்த்துக்கொள்ள பள்ளிக் கல்வித்துறை நடவடிக்கை எடுக்கும். இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

## கருநாடக மாநில கவர்னர்

பெங்களூர், ஆக. 2—கருநாடக மாநில கவர்னராக கோவிந்தநாராயண் பதவி ஏற்றார். அவருக்கு உயர்நீதிமன்ற பிரதம நீதிபதி கோவிந்தபட் பதவி பிரமாணம் செய்து வைத்தார்.

புதிய கவர்னர் கோவிந்தநாராயணனுக்கு 60 வயது. அவர் முன்பு பாதுகாப்பு செயலாளராகப் பணி செய்தார்.

## போனஸ் பிரச்சினை: ஜனதா தலைவர் அறிவிப்பு

புனே, ஆக. 2—தொழிலாளர்களின் போனஸ் பிரச்சினை சம்பந்தமாக விரைவில் முடிவு எடுக்கப்படும் என்று ஜனதாக் கட்சித் தலைவர் சந்திரசேகர் கூறினார்.

விரைவில் பல்வேறு தொழிற்சங்கத் தலைவர்களை அழைத்தும் பேச்சு வார்த்தை நடத்த இருக்கிறோம். அந்தப் பேச்சு வார்த்தையில் ஒரு முடிவு ஏற்படலாம் என்றும் அவர் கூறினார்.

இந்தியா இதுவரை காணாத சாதனை

முகவை மாவட்டத்திற்கு முதலிடம்

# பல கோடி ரூபாயில் வளர்ச்சித் திட்டம்

## 320 கிராமங்களுக்கு குடித் தண்ணீர் வசதி

மதுரை, ஆக. 2— பின்தங்கிய மாவட்டமான ராமநாதபுரம் மாவட்டத்தில் பல கோடி ரூபாய்க்கு திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகிறது. இவ்வளவு தொகை இந்தியாவிலேயே வேறெந்த மாவட்டத்திலும் செலவிடப்பட்டதில்லை என்று மாவட்ட கலெக்டர் எஸ். நாராயணன் கூறினார்.

நீண்ட காலமாகத் தீர்க்கப்படாமல் உள்ள குடிதண்ணீர் பிரச்சினையைப் போக்க ராமநாதபுர மாவட்டத்தில் உள்ள 330 கிராமங்களுக்கு குடிநீர் வழங்க தீவிரத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

ராமநாதபுர மாவட்ட கலெக்டர் எஸ். நாராயணன் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:

### 6 கோடி ரூபாய்

ராமநாதபுர மாவட்டத்திலுள்ள வறட்சிப் பகுதிகளில் 5 ஆண்டுகளில் மேம்பாட்டுத் திட்டங்கள் நிறைவேற்ற 6 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. அந்தத் தொகையில் இதுவரை 68 சதவிகிதத் தொகையான 4 கோடியே 3 லட்சத்து 82 ஆயிரம் ரூபாய் செலவிடப்பட்டுள்ளது.

இவ்வளவு பெரிய தொகை இந்தியாவிலேயே வேறெந்த மாவட்டத்திலும் செலவழிக்கப்பட்டதில்லை.

இது தவிர மேலும் இந்த ஆண்டுக்கு ராமநாதபுரம் மாவட்டத்தில் கென்று மண்வளப் பாதுகாப்பு, சிறு பாசனத் திட்டத்திற்கென்று 1 கோடியே 18 லட்சத்து 71 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

ராமநாதபுர மாவட்டத்தில் மொத்தம் உள்ள 4 ஆயிரத்து 892 கிராமங்களில் 763 கிராமங்களுக்கு குடிதண்ணீர் கிடைக்காமல் மக்கள் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

தற்பொழுது 319 கிராமங்களுக்கு உடனடியாக குடி தண்ணீர் கிடைக்க தீவிரத் திட்டங்களை அரசு செயல்படுத்தி வருகிறது. குடிதண்ணீர் கிடைக்கும் பகுதிகளிலிருந்து பல்வேறு வழிகளில் இந்தக் கிராமங்களுக்குத் தண்ணீர் கொண்டுவர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

வருகிற ஆண்டு 1978 மார்ச் மாதத்திற்குள் இந்தத் திட்டங்கள் முடிவடைந்து கிராமங்கள் அனைத்திற்கும் குடிதண்ணீர் கிடைத்து விடும்.

### நிலத்தடி நீர்

மத்திய அரசின் நில நீர் ஆராய்ச்சி நிறுவனத்தின் முயற்சியால் காரியாபட்டி, கண்ணங்குடி, கமுதி ஆகிய ஊராட்சி ஒன்றியப் பகுதிகளில் 8 குழாய்க் கிணறுகள் தோண்டப்பட்டன.

இவற்றிலிருந்து 10 ஆயிரம் காலன் தண்ணீர் கிடைக்கிறது. இதனால் ஒரு கிணற்றிலிருந்து 50 ஏக்கர் நிலம் வரை சாகுபடி செய்ய முடியும்.

### கடன் வசதி

விவசாயக் கடனாக இது வரை அளிக்கப்பட்டிருந்த 12 கோடி ரூபாய்க் கடனில் ரூபாய் 8 கோடி வரை நீண்டகாலக் கடனாக ராமநாதபுர மாவட்ட கூட்டுறவு வங்கி காலம் நீட்டிக் கொடுத்திருக்கிறது.

மேலும் புதிதாகபயிர்க்

(2-ம் பக்கம் பார்க்க)

கூட்டுறவு கடனை செலுத்த முடியாத

## விவசாயிகளுக்கு சலுகை: அமைச்சர் எட்மண்ட் அறிவிப்பு

சென்னை, ஆக. 2— கூட்டுறவுக் கடனை திருப்பிச் செலுத்த முடியாத நிலையில் இருக்கின்ற விவசாயிகள் "அனுவாரி சர்டிபிகேட்" வாங்கிக்கொடுத்தால் அவர்கள் மீது எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படமாட்டாது என்று சட்டமன்றத்தில் கூட்டுறவு அமைச்சர் எட்மண்ட் அறிவித்தார்.

கூட்டுறவு சங்கங்களின் மூலமாக நெல் பயிர் செய்யும் விவசாயிகளுக்கு வழங்கப்படும் குறுகிய காலக் கடன்களுக்கான கால வரம்பை ஓராண்டாக உயர்த்தும் ஆலோசனை இருக்கிறதா என்று ஏ. சாமிதாஸ் (ஜனதா) கேட்டார்.

இதற்கு உணவு, கூட்டுறவுத்துறை அமைச்சர் எட்மண்ட் "இல்லை" என்று பதிலளித்தார்.

சாமிதாஸ்:— நெல் பயிருக்கு 6 மாத கால குறுகிய கடன் தரப்படுகிறது. அதை 3 மாதத்தில் திருப்பிச் செலுத்த வேண்டியிருக்கிறது; கடன் கொடுப்பதில் சில நேரங்களில் தாமதம் ஏற்படுகிறது, ஆகவே, மத்திய காலக் கடனாக நெல் பயிருக்குத் தரப்படுமா?

அமைச்சர்: 3 மாதத்தில் வசூல் செய்கிறார்கள் என்பது சரியல்ல, பயிர் அறுவடை முடிந்த பிறகு 2 மாத காலம் அவகாசம் தரப்படுகிறது.

கோவிந்தராசன் (மார்க்சிஸ்ட்): 1 ஆண்டுகாலம் என்று நிர்ணயிக்கப்படுமா?

அமைச்சர்: ஓராண்டாக நீடிக்கும் யோசனை அரசு பரிசீலனையில் இல்லை.

### ஜப்தி

உமாநாத (மார்க்சிஸ்ட்): ஜப்திகள் நடக்கின்றன; நோட்டீஸ்கள் கொடுக்கிறார்கள். தனிப்பட்டவர்கள் நேரடியாக வந்தால் கவனிக்கப்படும் என்று முதலமைச்சர் சொல்லியிருக்கிறார். ஆகவே ஜப்தி போன்ற நடவடிக்கைகள் நிறுத்தப்படுமா?

அமைச்சர்:— உண்மையாக திருப்பித்தர முடியாமல் இருக்கக் கூடிய சூழ்நிலை

(2-ம் பக்கம் பார்க்க)

# கருணாநிதி எனக்கு தலைவரா?

## அன்பழகன் விளக்கம்

சென்னை, ஆக. 2— தனிப்பட்ட முறையில் கருணாநிதி எனக்குத் தலைவர் அல்ல என்று சட்ட சபையில இன்று அன்பழகன் தெரிவித்தார்.

கழக உறுப்பினர் திருச்சி சவுந்தரராசன் பேசிக்கொண்டிருந்தபோது அன்பழகன் இந்த விளக்கத்தைத் தந்தார்.

அன்பழகன் கூறியதாவது:—

தனிப்பட்ட முறையில் தலைவராக நான் கலைஞர் கருணாநிதியை ஏற்கவில்லை. அவரை விட நான் வயதானவன் என்று சொல்லியிருக்கிறேன்.

இப்போதும் அதே நிலை தான் தனிப்பட்ட முறையில் (இண்டிவிஜுவல் கப்பாசிட்டி)

ஆனால் கட்சி என்ற முறையில் அவரை தலைவராக தளபதியாக ஏற்றுக் கொள்கிறேன என்று சொல்லியிருக்கிறேன். கட்சிக்குள் மறுக்கவில்லை என்று அந்த கூட்டத்தில் (நேப்பியர் பார்க் கூட்டம) சொல்லியிருக்கிறேன்.

கிளைவ் ஹாஸ்டல் சம்பவம் குறித்து தி.மு.க அரசு விசாரணை செய்து அந்த அறிக்கை பொது மககள் முனபு வைக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு அன்பழகன் தெரிவித்தார். அன்பழகன் இதைத் தெரிவித்தபோது கருணாநிதி சபையில் இருந்தார்.

திருச்சி சவுந்தரராசன் பேசுகையில் கூறியதாவது:

ஏழை, பாட்டாளி உணர்வுகளை பிரதிபலிப்பதாக இந்த நிதிநிலை அறிக்கை அமைந்திருக்கிறது. இதுபற்றி பேராசிரியர் குறுக்கிட்டு உப்பு இல்லை; சப்பென்று இருக்கிறது என்று சொன்னார்.

இதற்கு முன்பிருந்த ஆட்சி நாட்டை நோயாளியாக ஆக்கி விட்டது. ஆகவே உப்பு இல்லாத நிலைமை இருக்கிறது.

### கொடுமை

மா மருந்துக்கு உப்பற்ற பத்தியம் என்றநிலை உருவாகியிருக்கிறது என்று கருதுகிறேன். இது ஒரு மாமருந்தாகும்.

பேராசிரியர், ஜனதிபதி ஆட்சி காலக் கொடுமை பற்றிக் குறிப்பிட்டார். அதை ஏற்றுக் கொள்கிற நிலைமை இருந்தாலும் பேராசிரியரின் உணர்வு அடிப்படையில் கடந்த கால ஆட்சியில் எந்தெந்த அளவில் கொடுமைகள் நடந்தன என்பதைச் சொல்லியிருந்தால் மகிழ்ச்சி அடைந்திருப்பேன்.

### தலைவரல்ல

நேப்பியர் பூங்கா கூட்டத்தில் பேராசிரியர் இப்போது எதிர்க் கட்சித் தலைவராக இருக்கும் கருணாநிதியை நான் தலைவராக ஏற்கமாட்டேன் தளபதியாகத்தான் ஏற்பேன் என்று அவர் வீராவேசமாகப் பேசினார்.

அதே வீராவேசத்துடன் இதையும் சொல்லியிருக்க வேண்டும்: அவர்களுடைய ஆட்சியில் ஆயிரக்கணக்கான இளைஞர்கள் கொடுமைப்படுத்தப்பட்டனர். சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டனர்.

கிளைவ் ஆஸ்டலில் கொடுமைகள் நடந்தன: 10, 15 வயது பாலகர்கள், இளம் தளிர்கள் நான்கு சுவர்க்குள் தாக்கப்பட்டனர்: ரத்தம் கொட்டியது.

### அப்போது சொல்லாததேன்

அதை அவர் கண்டிருத்திருக்க வேண்டும். ஜனதிபதி ஆட்சிகாலத்தில நடந்ததை கண்டிக்கும் அவர் அப்போது ஏனோ அதைப் பற்றி சொல்லவில்லை.

இவ்வாறு திருச்சி சவுந்தரராசன் கூறிய பிறகு அன்பழகன் எழுந்து கருணாநிதியை தலைவராகத் தான் ஏற்கவில்லை என்று நேப்பியார் பூங்கா கூட்டத்தில் பேசியது பற்றிவிளக்கமளித்தார்.

## அண்ணா சிலை மோசடி

3-ம் பக்கம்

## மேலவைத் தேர்தல்

சென்னை, ஆக. 2— மேலவைக்கான 7 இடங்களுக்கான தேர்தல் இன்று நடைபெற்றது. சட்ட சபை உறுப்பினர்கள் வாக்களித்தனர்.

இந்தத் தேர்தலில் அமைச்சர்கள் நாராயணசாமி முதலியார், ஆர்.எம்.வீ., ராகவானந்தம் ராஜாமுகமது ஆகியோரும் எஸ். எம். மீயாகான், (மு.லீக்) ஆற்காடு வீராசாமி, நீலநாராயணன் (தி.மு.க) பா. மாணிக்கம் (கம்யூ) ஆகியோர் போட்டியிடுகின்றனர்.

இன்று காலை 10 மணி முதல் மாலை 3 மணி வரை வாக்குப்பதிவு நடந்தது பிற்பகல் 1 மணி வரை 222 பேர் வாக்களித்தனர்.

## பவானி கால்வாய் திறப்பு

கோவை, ஆக. 2— கீழ் பவானிக் கால்வாயில் இம்மாதம 15-ம் தேதி முதல் பாசனத்திற்குத் தண்ணீர் விடப்படும் என்று கோவை மாவட்ட கலெக்டர் நரசிம்மன் கூறினார்.

இதன் மூலம் 80 ஆயிரம் ஏக்கர் பாசன வசதி பெறும்.

# இந்திரா ஜனதாவில் சேருவாரா? சந்திரசேகர் அளித்த பதில்

புனே, ஆக. 2—இந்திரா காந்தி ஜனதா கட்சியில் சேர விரும்பினால் சேர்த்துக் கொள்வீர்களா என்று ஒரு நிருபர் ஜனதாத் தலைவர் சந்திரசேகரைக் கேட்டார்.

இந்தக் கேள்விக்கு புன்முறுவலையே முதலில் சந்திரசேகர் பதிலாகத் தந்தார்.

இந்திராகாந்தியும் ஜனதாக் கட்சியில் சேருவார் என்று பம்பாயைச்சேர்ந்த பிரபல பத்திரிகையாளர் ஆருடம் கூறியிருக்கிறாரே அதனால் கேட்கிறோம் என்று அந்த நிருபர் வலியுறுத்தினார்.

அந்தப்பத்திரிகையாளர் தமது வார இதழில் இந்திராகாந்தியைப்பற்றியும் சஞ்சய் காந்தியைப் பற்றியும் எத்தனையோ ஆருடங்கள் கூறியிருக்கிறார் அவை அனைத்தும் தவறானவை என்பதை இந்திராவும் சஞ்சயும நிரூபித்திருக்கிறார்கள் என்று சந்திரசேகர் கூறினார்.

இந்திராகாந்தி ஜனதா கட்சியில் சேர விரும்பினால் சேர்த்துக் கொள்வீர்களா என்று நிருபர் மீண்டும் கேட்டார்.

இதுபற்றி இந்திரா காந்தி பேசும் போது எனது கருத்தைச் சொல்கிறேன் என்று சந்திரசேகர் என்று கூறினார்.

பொன்னையன் அறிவிப்பு

# கட்டபொம்மன் போக்குவரத்துக் கழக பணியாளர் பிரச்சினை

சென்னை, ஆக. 2—கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகத்தில் முன்னர் சிக்கன நடவடிக்கையாக 448 உபரிப் பணியாளர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டனர். அவர்களில் 101 பணியாளர்கள் பற்றிய பிரச்சினையை இந்த அரசு பரிசிலீத்து வருகிறது என்று தமிழக போக்குவரத்துத் துறை அமைச்சர் பொன்னையன் சட்டமன்றத்தில் அறிவித்தார்.

கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகத்தில் 76-77ம் ஆண்டில நிகரலாபம் அல்லது நஷ்டம் எவ்வளவு என்று ஏ. சாமிதாஸ் (ஜனதா) கேட்ட கேள்விக்கு அமைச்சர் பொன்னையன் பதிலளித்துக் கூறியதாவது:-

1976-77-ம் ஆண்டில் கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகத்தின் நிகரலாபம் 15 லட்சத்து 64 ஆயிரம் ரூபாய் என தணிக்கைக்குமுன் உள்ள கணக்குப்படி கணக்கிடப்பட்டுள்ளது.

31-1-76 வரை இந்த கழகத்திற்கு ஏற்பட்ட நஷ்டம் 140 லட்சத்து 84 ஆயிரம்;

சாமிதாஸ்: குமரி மாவட்டத்தில் அரசு போக்குவரத்துக் கழகமாக இருந்த போது மகுந்த லாபம் ஈட்டியது; கட்டபொம்மனுக மாற்றப்பட்ட பிறகு நஷ்டம் வரக் காரணம் என்ன?

அமைச்சர் பொன்னையன்: 1974 ஜனவரி 1ம் தேதி கட்டபொம்மன் கழகம் தொடங்கப்பட்டது; 1974—75ம் ஆண்டில் 64 லட்சத்து 99 ஆயிரம் ரூபாய் நஷ்டமும் 1975—76ம் ஆண்டில் 85 லட்சத்து 85 ஆயிரம் ரூபாய் நஷ்டமும் ஏற்பட்டது. இந்த நஷ்டத்திற் காரணகாரணமும் பரிசீலனையில் இருக்கிறது.

உமாநாத்: அந்த ஊழியர்களின் கோரிக்கைகளுக்கு தீர்வுகாண அரசு என்ன நடவடிக்கை எடுக்க இருக்கிறது:

அமைச்சர்: ஊழியர்களின் கோரிக்கைகளை அரசு கவனித்து நடவடிக்கை எடுக்கும்; 1977-ம் ஆண்டில் 15 லட்சம் ரூபாய் அதுலாபம் ஈட்டியது.

ஜேம்ஸ்:- 800 தொழிலாளர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளனர்; அவர்களுக்கு மீண்டும் வேலை வாய்ப்புத்தர அரசு நடவடிக்கை எடுக்குமா?

அமைச்சர்:- கட்டபொம்மன் போக்குவரத்துக்கழகத்தில் 10 சதவிகித உபரிபஸ் இருந்தன. 448 உபரிப்பணியாளர்கள் இருந்தனர்; சிக்கன நடவடிக்கை காரணமாக ஆட்குறைப்புச் செய்யப்பட்ட 101 பணியாளர்கள் பற்றிய பிரச்சினையை அரசு பரிசீலித்து வருகிறது;

கந்தசாமி (பார்வர்ட் பிளாக்); பல போக்குவரத்து கார்ப்பரேஷன்கள் நஷ்டத்தில் ஓடுகின்றன இவைகளை நிரந்தரமாக சீராக்க ஒரு நிபுணர்குழு போடப்படுமா?

அமைச்சர்: போக்குவரத்து வாரியங்களில உள்ள 8 வாரியங்களில் 3 வாரியங்கள்தான் நஷ்டத்தில் நடக்கின்றன. இருந்தாலும் உறுப்பினர் ஆலோசனை கவனிக்கப்படும்;

மூக்கையாத்தேவர்:- எல்லா வாரியங்களையும் இணைத்து ஒரே வாரியமாக ஆக்க அரசு நடவடிக்குமா?

அமைச்சர்- இதற்குத் தனி கேள்வி போடவும ஆனால் இதுபற்றி ஆராய்ந்த பட்டாபிராமன் கமிட்டி அறிக்கை கொடுத்திருக்கிறது இந்த வாரியங்களை இணைக்கக் கூடாது என்று அது மதரிவித்துள்ளது.

அந்த அறிவிப்பின் அடிப்படையில் அரசாங்கம் முடிவுகளை எடுக்க இருக்கிறது.

திருவல்லிக்கேணி நாகப்பையர் தெருவில் மத்திய சென்னை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில் ஐசரிவேலன் எம்.எல்.ஏ.வுக்கு பாராட்டு பத்திரம் வழங்கப்படுகிறது.

## குடிசை வாசிகளின் நலன்: ராகவானந்தம் அக்கறை

சென்னை, ஆக. 2—சென்னையில் பல்வேறு இடங்களில் உள்ள குடிசைப் பகுதி மக்களை தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தம் சந்தித்து அவர்களின் குறைகளைக் கேட்டறிந்தார்;

சென்னை 109-வது வட்டம் காமத்ரோடு, ஆலையம்மன் கோவில்தெரு ஆகிய பகுதிகளில் வாழும் குடிசைவாசிகள் மின்சார விளக்கு எரியாதது பற்றியும் கட்டிக்கொடுத்த வீடுகளில் தண்ணீர் வசதி இல்லாதது பற்றியும் அமைச்சரிடம் புகார் கூறினார்கள்;

வீட்டு வசதி ஏற்பாடு செய்து தரப்படாத குடிசைவாசிகளுக்கு விரைவில் வீடுகிடைக்க ஏற்பாடு செய்வதாகவும் குடிசைப் பகுதிகளில் சுகாதாரவசதிகளுக்கு ஏற்பாடு செய்வதாகவும் அமைச்சர் ராகவானந்தம் அவர்களிடம் கூறினார்;

101-வது வட்டம் புஷ்பாநகர் குடிசை வாழ்வோர் அமைச்சரிடம் மகஜர் கொடுத்தனர்; 112-வது வட்டத்தில் குறள்நெறி மன்றத்தார் குடிசைப் பகுதிகளில் துப்புரவுப் பணி செய்வதை அமைச்சர் துவக்கி வைத்ததோடு கழகக் கொடியும் ஏற்றினார்.

ராயபுரம் 1வதுவட்டம் மீனவர்காலனி குடிசைப் பகுதிகளைப்பார்வையிட்ட அமைச்சர் அவர்களுக்கான வசதி வாய்ப்புகளை விரைவில் செய்துதர ஏற்பாடு செய்யப்படும் என்று ஆறுதல் கூறினார்.

அமைச்சருடன் ஜேப்பியார், சைதை என். கண்ணன், மணி அங்கமுத்து, தெய்வசிகாமணி, முதது மற்றும் குடிசைமாற்று வாரிய அதிகாரிகள் சென்றனர்.

## விவசாயிகளுக்கு எட்மண்ட் அறிவிப்பு...

(1-ம் பக்கத்தொடர்ச்சி)

யில் இருப்பவர்கள் "அணுவாரி" சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்தால் அவர்கள் மீது எந்த நடவடிக்கையும் எடுக்க வேண்டாம் என்று அரசு உத்தரவிட்டுள்ளது.

எஸ். ஜே. ராமசாமி: கடனை உரம் எவ்வளவு பணம் எவ்வளவு என்று கொடுக்கிறார்கள் முழுவதையும் உரமாகத் தர அரசு உத்தரவிடுமா?

அமைச்சர்:- இது பற்றி அரசு ஆலோசிக்கும்.

ராமச்சந்திர ரெட்டியார்:- அறுவடை முடிந்த பிறகு கடனைத் திருப்பிக் கொடுக்க அவகாசம் தரப்படுமா?

அமைச்சர்: உற்பத்தியான தானியங்களைவிற்று கடனைக் கொடுக்க 2 மாத காலம் அவகாசம் தரப்படுகிறது.

அழகிரிசாமி (கம்யூ): நெல் இருபோக சாகுபடி செய்வதால் மோததவணை போதவில்லை; இதனால் சங்கடம் ஏற்படுகிறது. ஆகவே ஒரு ஆண்டு தவணை தரப்படுமா?

அமைச்சர்: அதிக பட்சம் 9 மாத காலம் அவகாசம் தரப்படுகிறது தஞ்சையில் குறுவை, தாளடி இரண்டுக்கும சேர்த்து 9 மாத அவகாசம் தரப்படுகிறது.

கந்தசாமி (பார்வர்டு பிளாக்): கூட்டுறவுக்கடன்கள் மூன்று பிரிவாகக் கொடுக்கப் படுகின்றன; "அணுவாரி" சர்டிபிகேட் வாங்க நடைமுறை சங்கடம் ஏற்படுகிறது இது பற்றி தாசில்தார் யாருக்கு துரை செய்ய வசதி இருக்கவேண்டும், 3, 4, ஆண்டுகளாக விளையாமல் சிக்கல் ஏற்படுகிறது; இப்படிப்பட்ட நடைமுறை சிக்கல்களைத் தவிர்க்க ஒரு நிபுணர் குழு அமைக்கப்படுமா?

அமைச்சர்: உறுப்பினரின் யோசனை கவனத்தில் கொள்ளப்பட்டு அரசு பரிசீலனை செய்யும்.

அடிகாபதி: வட்டி விகிதம் அதிகமாக ஆகிறது. மாநில வங்கியே கிராம வங்கிகளுக்கு நேரடியாக கடன் கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமா? மாவட்ட வங்கிகளிலிருந்து கடன்கொடுக்கும போது அரசியல் செல்வாக்கு வருகிறது; ஆகவே மாவட்ட வங்கிகள் கலைக்கப்படுமா?

அமைச்சர்: அரசியல் தலையீடு இல்லாமல் தகுதி அடிப்படையில் கடன்கள் கிடைக்க அரசு ஏற்பாடு செய்யும்;

சிவசாமி (கம்யூ): கரும்பு சாகுபடி செய்ய 14 மாத காலம் தேவைபடுகிறது. ஆகவே அந்தக்கடனும் 14 மாத காலம் நீடிக்கப்படுமா?

அமைச்சர்:- உறுப்பினர் யோசனை கவனத்தில் கொள்ளப்படும்.

சொர்ணம் (மார்க்சிஸ்ட்): பயிர் செய்யப்படுவதற்கு முன்பு இந்தக் கடன்கள் கொடுக்கப்படுமா? அப்படி தரப்படவில்லை என்று புகார் வந்துள்ளதா?

அமைச்சர்: பயிர்செய்யப்படுவதற்கு முன்பாகவே கடன் கொடுக்கப்படுகிறது. இந்த அமைச்சரவைக்கு புகார் ஏதும் வரவில்லை;

ப. உ. சண்முகம்: கடன் கொடுப்பதில் முந்தைய அரசு பிறப்பித்துள்ள உத்தரவு கடைபிடிக்கப்படுமா?

அமைச்சர்: முந்தைய அரசின் நிலை என்னவோ அதே நிலை இப்போதும் இருக்கிறது;

ஆர். கிருஷ்ணன்: கடன்கள் வசூல் செய்ய அதிகாரிகள் கார்களிலும், ஜீப்களிலும் செல்கிறார்கள். அந்த செலவுகளை விவசாயிகளிடமிருந்து வசூல் செய்ய வேண்டியிருக்கிறது இப்படிப்பட்ட நிலைமை தடுக்கப்படுமா?

அமைச்சர்:- எந்த சமயத்தில் எந்த அதிகாரிகள் அப்படிச் சென்றனர் என்று சொன்னால் நடவடிக்கை எடுக்க முடியும்;

## சேலம் மாவட்டத்தில் பெரியவர்சக்கரபாணி: சிறப்பான வரவேற்பு

சேலம், ஆக. 2- சேலம் மாவட்டத்தில் பல்வேறு நகரங்களில் பெரியவர் எம். ஜி. சக்கரபாணிக்கு சிறப்பான முறையில் வரவேற்பு அளிக்கப்பட்டது.

சேலம் மாவட்டம் ராசிபுரத்தில் நாடாளுமன்றத் தொகுதி எம். ஜி. ஆர். மன்ற பொருளாளர் ஏ. ஆர். முருகேசன் ஒன்றிய அமைப்பாளர் எஸ். வருதராஜன் ஆகியோர் பெரியவருக்கு சிறப்பான முறையில் நகர எல்லையில் மாலை சூட்டி வரவேற்பு அளித்தனர்; வழக்கறிஞர் மாரப்பன் கூட்டுறவு வங்கித் தலைவர் பெரியசாமி மோகன், கல்யாணி ஏ. ஆர். கந்தசாமி குப்புசாமி மற்றும் திரளான கழகத் தோழர்கள் வரவேற்பில் கலந்து கொண்டனர்;

ராசிபுரம் அரிமாசங்கம் எஸ். ஏ. பெரியசாமி தலைமையில் பெரியவருக்கு சிறப்பான வரவேற்பு அளித்தது. டாக்டர் ஜி. எஸ். கந்தசாமி வரவேற்புரை ஆற்றினர்.

ஒன்றிய அமைப்பாளர் வருதராசன் தலைமையில் நடைபெற்ற சிங்களாந்தபுரம் பொதுக்கூட்டத்தில் பெரியவர் எம். ஜி. சக்கரபாணி, அணுகுண்டு அன்புரோஸ் அண்ணாமலை டாக்டர் கந்தசாமி; வழக்கறிஞர் மாரப்பன்; ஏ. ஆர். முருகேசன், ஆகியோர் பேசினர்;

இராசிபுரம் டாக்டர் எல்லப்பன் பெரியவர் முன்னிலையில் அனைத்திந்திய அண்ணா தி. மு. க.வில் சேர்ந்தார். டாக்டர் எல்லப்பனுக்கு பெரியவர் மாலை அணிவித்தார்.

நாமகிரிப் பேட்டையில் கூட்டுறவு வங்கியின் சார்பில் வங்கித்தலைவர் கே. பெரியசாமி மாலை அணிவித்து பெரியவரை வரவேற்றார்.

## பல் டாக்டருக்கு வேலை

சென்னை, ஆக. 2—படித்துவிட்டு வேலையின்றி இருக்கும் 20 பல் டாக்டர்களுக்கு உடனடியாக வேலை கொடுக்க ஏற்பாடு செய்யப்படுகிறது என்று நிதி அமைச்சர் நாஞ்சிலார் சட்ட மன்றத்தில் தெரிவித்தார்.

பல் சிகிச்சை உதவியாளர்கள் உண்ணாவிரதம் குறித்து சட்டசபையில் இன்று ஜேம்ஸ்கே. கந்தசாமி அழகிரிசாமி, ஆர். உமாநாத் ஆகியோர் ஒரு ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வந்தனர்;

இதற்கு நாஞ்சிலார் பதிலளித்துக்கூறியதாவது அனைவருக்கும் வேலை வாய்ப்பு தரக்கோரி கால வரம்பின்றி பல் இயல் மருத்துவ உதவியாளர்கள் உண்ணாவிரதமிருக்கிறார்கள். அந்த ஊழியர்களுக்கு உடனே வேலை கொடுத்தால் அரசுக்கு அதிகப்படியாக 5 லட்சத்து 38 ஆயிரம் ரூபாய் செலவாகும்; உடனடியாக 20 பதவிகளை தோற்றுவிக்க மருத்துவ கல்வி இயக்குநர் கூறியுள்ளார். அவர்கள் அனைவருக்கும் வேலை அளிக்க அரசு மேலும் முயற்சியெடுக்கும். இவ்வாறு நிதி அமைச்சர் நாஞ்சிலார் பேசினார்;

## சென்னையில் கனமழை

சென்னை, ஆக. 2—சென்னையில் நேற்று (1-ந் தேதி) நள்ளிரவில் அரைமணிநேரம் கனமழை பெய்தது. சென்னையை அடுத்து சுற்றுப் புறத்திலும் மழை பெய்தது.

## மேலூருக்கு தீயணைப்பு நிலையம்: அரசுக்கு பரமசிவன் கோரிக்கை

சென்னை, ஆக. 2— மதுரை மாவட்டம் மேலூரில் தீயணைப்பு நிலையம் அமைக்குமாறு மேலூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் அ. ம. பரமசிவன் அரசைக் கேட்டுக் கொண்டார்.

தமிழ்நாடு அரசின் நிதிநிலை அறிக்கையை வரவேற்றுப் பாராட்டி பேசிய சட்டமன்ற உறுப்பினர் மேலூரில் தீயணைப்பு நிலையம் அமைக்கவும், கொட்டாம்பட்டி, திருவாதவூரில் புறக்காவல் நிலையங்கள் அமைக்கவும் வேண்டுமென கேட்டுக் கொண்டார்;

மேலும் அவர் பேசியதாவது: விவசாயிகள், விதவைகள், பின்தங்கியோர்: அரசு ஊழியர், மாணவர், தொழிலாளர் ஆகிய அனைத்து மக்களின் நலன்களுக்கும் ஆவன செய்திட நிதிநிலை அறிக்கையில்வழிவகை செய்யப்பட்டுள்ளதைப் பாராட்டுகிறேன்: பெரியாறுமேம்பாட்டுத் திட்டத்தை விரைந்து செயல்படுத்த அரசு முன் வந்ததைப் பாராட்டுகிறேன். மேலூர் தொகுதியில் பல குளங்களை தூர்வாரி சீரமைக்க வேண்டுகிறேன், மேலூர் நகருக்கு பாலாறு குடிநீர் திட்டம சுமார் 44 லட்சம ரூபாய் செலவில் செயல்படுத்தப்பட்டும பயனற்று பரிதவிக்கும் நிலை நீக்க மாற்று ஏற்பாடுகள் செய்திட கேட்டுக் கொள்ளுகிறேன்.

வந்தது பாராட்டுக்குரியது; மேலூர் தொகுதியில் பல கிராமங்களுக்கு பாதையேஇல்லை; இந்நிலை நீக்கப்படும் வகையில் கிராம இணைப்பு சாலைகள், அணுகுசாலைகள் அமைக்கவும், மினிபஸ் விடவும் திட்டமிட்டிருப்பதை வரவேற்கிறேன்.

### மருத்துவமனை

தனியார் கட்டிடத்தில் உள்ள கொட்டாம்பட்டி மருத்துவ மனைக்கு விரைவில் சொந்தக் கட்டிடம் கட்ட வேண்டுகிறேன். கருங்காலக்குடி ஆரம்ப சுகாதார நிலையத்தையும் மேலூர் மருத்துவ மனையையும் விரிவாக்கப்பட வேண்டுவதோடு திருவாதவூர் அ. வலையபட்டி ஆகிய ஊர்களில் ஆரம்ப சுகாதார நிலையங்கள் அமைக்கவும் வேண்டுகிறேன்;

### கல்லூரி

மேலூர் கலைக்கல்லூரியில் அறிவியல் பட்டப்படிப்பு, பட்ட மேற்படிப்பு, கொட்டாம்பட்டியில் கயிறு தொழிற்சாலை ஆகியவை தொடங்கிட வேண்டுவதோடு அண்ணாவின் வழியில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களின் செயல்திட்டங்கள் அமைந்திருப்பதை மனமகிழ்வுடன போற்றுகிறேன்.

இவ்வாறு அ. மா. பரமசிவன் பேசினார்;

### இலவச படிப்பு

அனைவருக்கும் மாணவர்கள் அனைவருக்கும் படிப்புக் கட்டணமின்றி பயில வசதியளிக்க முன

## கால்நடை ஊழியர் கோரிக்கை: அமைச்சர் ஏற்றார்

சென்னை, ஆக. 2—கால்நடை பராமரிப்புத் துறையில் தீவிர கால்நடை அபிவிருத்தி திட்டம், கேந்திர கிராம திட்டம்ஆகியவைகளின் (உதவியாளர்) பதவிகளை நீக்கி அரசு உத்தரவிட்டிருந்தது தமிழ்நாடு என் ஜி ஓ யூனியன் தலைவர் சிவ இளங்கோ கால்நடை பராமரிப்புத் துறை அமைச்சுப்பணி அலுவலர் சங்கத்தலைவர் சா. நியூமன் நவமணி, பொதுச்செயலாளர் எம். சுந்தரம் ஆகியோர் அமைச்சர் பி. டி. சரஸ்வதியை சந்தித்து இந்த உத்தரவை செயல்படுத்தக் கூடாது எனக் கேட்டுக் கொண்டனர்;

அரசு ஊழியர் கோரிக்கையை அனுதாபத்துடன் கேட்ட அமைச்சர் பி. டி சரஸ்வதி அவ்வுத்தரவிற்கு தற்காலிக தடையை உடனடியாக வழங்கினார். அரசு ஊழியர் கோரிக்கையை கூடுதல் இயக்குனர் டாக்டர் ப. சின்னதுரை பரிந்துரைத்தார். அமைச்சுப்பணி அலுவலர் சங்கத்தலைவர் சா. நியூமன் நவமணி சங்கத்தின் சார்பில் அமைச்சர் பி. டி. சரஸ்வதிக்கு நன்றி தெரிவித்தார்.

## முகவை மாவட்ட வளர்ச்சி திட்டம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கடனாக 8 கோடியே 52 லட்சம் ரூபாயும், பால் மாடு வளர்ப்புக்கு 30 லட்ச ரூபாயும், நகைக்கடனுக்கு 1கோடியே 20 லட்சமும் ரொக்கம் கடனுக்கு 1 கோடியே 50 லட்சமும் கூட்டுறவு வங்கி மூலம் கொடுக்கப்பட்டுள்ளது.

20 ஆடுகள் கொண்ட ஆட்டுப் பண்ணைகள் அமைக்க இது வரை 172 விவசாயிகளுக்கு கடனாக வழங்கப்பட்டுள்ளது;

ராமேஸ்வரம் தீவில் போக்குவரத்து வசதிக்காக பஸ் ஒன்று விடப்பட்டுள்ளது மேலும் இந்த மாதம் 1ந் தேதி முதல் ஒரு பஸ் விடப்பட்டுள்ளது; தீவுக்குள் "டாக்சி" வாங்கக் கடனளிக்கவும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

ராமநாதபுர மாவட்டத்தில் விவசாயிகள் நெல்கொண்டு போவது தடுக்கப்படுவதாக கூறுவது தவறு; விவசாயிகள் தாராளமாக நெல் கொண்டுபோகலாம்;

இவ்வாறு மாவட்டக் கலெக்டர் எஸ். நாராயணன் கூறினார்;

## ஜேப்பியார் தலைமையில் சிம்சன் தொழிலாளர்கள் கூட்டம்

சென்னை, ஆக. 2—சிம்சன் குரூப்பில் பணியாற்றும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக தொழிலாளர்கள் கூட்டம் சென்னை மாநகர கழக பொறுப்பாளர் ஜேப்பியார் தலைமையில் நடைபெற்றது.

சென்னை லாயிட்ஸ் சாலையில் உள்ள தலைமைக் கழகத்தில் நடைபெற்ற இக்கூட்டத்தில் சிம்சன் குரூப்பில் பணியாற்றும் கழகத் தொழிலாளர்கள் சந்தா செலுத்தி சங்க உறுப்பினர்களாக தங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டுமென தீர்மானிக்கப்பட்டது.

### அடுத்த கூட்டம்

சிம்சன்குரூப் தொழிலாளர்கள் சங்கத்தேர்தல் குறித்து ஆலோசனை கூட்டம், லாயிட்ஸ்சாலை 156 எண்ணுள்ள கழக தலைமைச் செயலகத்தில் ஆகஸ்டு 6-ந்தேதி மாலை 4 மணிக்கு சென்னை மாநகர கழகப்பொறுப்பாளர் ஜேப்பியார் தலைமையில் நடைபெறுமென்றும் அக்கூட்டத்தில் அனைத்து கழக தொழிலாளர்களும் கலந்து கொள்ளுமாறும் இந்தியா பிஸ்டன் தெய்வசிகாமணி கேட்டுக் கொண்டுள்ளார்;

# "மீனவ நண்பன்" பட விழாக்குழு

## மதுரை

பாலகுருவா ரெட்டியார் எம். எல். ஏ.
சி. தங்கம்
மதுரை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற தலைவர்
கோட்டைப்பட்டி முத்துராமன்
மதுரை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்
பால்ராஜ்
மதுரை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற துணைச் செயலாளர்
நவநீத கிருஷ்ணன்
மதுரை மாநகர எம். ஜி. ஆர். மன்ற பொறுப்பாளர்

## ஈரோடு

சு. முத்துசாமி எம். எல். ஏ.
ஈரோடு முத்து
திருச்செங்கோடு நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற தலைவர்,
ஈரோடு அழகாசன்
நகர எம். ஜி. ஆர். மன்ற பொறுப்பாளர்
வி. பி. முருகேசன்
நகர அமைப்பாளர்
கே. தனபால்
18-வது வட்ட அமைப்பாளர்
செல்வம்
வீ. சத்திரம் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்
ஞானசேகரன்
8-வது வட்ட அமைப்பாளர்

## சேலம்

வரதராசன் எம். எல். ஏ.,
ராஜா
சேலம் நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற தலைவர்
எஸ். பி. அங்கமுத்து
சேலம் நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்
எம். எப். ரஹிமான்
சேலம் மாவட்ட துணை அமைப்பாளர்
அப்பாவு
சேலம் நகர எம். ஜி. ஆர். மன்ற பொறுப்பாளர்

## கோவை

சு. மருதாசலம் எம். எல். ஏ.
திருப்பூர் மணிமாறன் எம். எல். ஏ.
பிரபாகர்
கோவை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற தலைவர்:
பேரூர் சண்முகசுந்தரம்
கோவை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்
த. மலரவன்
எம். ஜி. ஆர். மன்றம்
இரா. இளையதம்பி
எம். ஜி. ஆர். மன்றம்
இரா. அண்ணாநம்பி
கோவை நகர எம். ஜி. ஆர். மன்ற பொறுப்பாளர்

## தஞ்சை

யாகப்பா தேவியர்
தஞ்சை நகர அமைப்பாளர்
அய்யம்பேட்டை அஜீஸ்
தஞ்சை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்
சந்தானகிருஷ்ணன்
தஞ்சை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற பொருளாளர்
கரந்தை பஞ்சாபகேசன்
எம். ஜி. ஆர். மன்றம்

## திருச்சி

சி. மாணிக்கம் எம். எல். ஏ.
கரு. அன்புதாசன்
திருச்சி நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்:
தேவதாஸ்
திருச்சி நகர அமைப்பாளர்,
அன்பழகன்
எவர்கிரீன் எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர்;
கிருஷ்ணமூர்த்தி
எம். ஜி. ஆர். மன்றம்,

## நெல்லை

எம். எம். ஏ. ரசாக் எம். எல். ஏ.
ப. இளமதி
நெல்லை நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்
சு. ப. கண்ணன்
நெல்லை நகர எம். ஜி. ஆர். மன்ற பொறுப்பாளர்
நெல்லை கூத்தாசன்
நெல்லை பெருநகர அமைப்பாளர்

## கரூர்

கு. வடிவேலு எம். எல். ஏ.
கே. பி. பாலகிருஷ்ணன்
கரூர் நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற பொறுப்பாளர்
குளித்தலை பன்னீர்செல்வம்
கரூர் நாடாளுமன்ற எம். ஜி. ஆர். மன்ற பொருளாளர்
கே. என். வேலாயுதம்
நகர துணை அமைப்பாளர்
எம. சாரங்கபாணி
நகர அமைப்பாளர்
பி. மாரப்பன்
கைத்தறி சங்க செயலாளர்
ஏ. கிருஷ்ணன்
நகர பொருளாளர்
டி. ஈ. வின்செனட்
மாவட்ட பொது தொழிற்சங்க துணைத்தலைவர்

பொதுச்செயலாளர் — திருச்சி சௌந்தரராசன் எம். எல். ஏ.
பொருளாளர் — கே. கண்ணன்

துணைத்துலக எம். ஜி. ஆர். மன்றம்; சாரபு மன்றம் (தலைமை மன்றம்) சென்னை-14

---

### தி. மு. கழக பிரமுகர் செய்த

# அண்ணா சிலை வசூல் மோசடி

## சட்டசபையில் சரமாரி கேள்விகள்

சென்னை, ஆக. 2—அண்ணா சிலை வைக்க டிக்கெட் போட்டு முறைகேடாக வசூல் செய்த வேலூர் கூட்டுறவு மத்திய வங்கியின் முன்னாள் தலைவர் வடிவேலு மீது வழக்குத் தொடர புலன் விசாரணை செய்யப்பட்டு வருகிறது என்று அமைச்சர் ஜி ஆர். எட்மண்ட் இன்று சட்டசபையில் கூறினார்.

ரூபாய் 5, 10, 15, 25, 50 ஆகிய டிக்கெட்டுக்கள் 1 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய்க்கு அச்சடிக்கப்பட்டு வசூல் செய்யப்பட்டிருக்கிறது என்றும் அமைச்சர் எட்மண்ட் கூறினார்.

இன்று சட்டசபையில் கழக உறுப்பினர் எஸ். ஜே. ராமசாமியின் கேள்வி ஒன்றுக்கு பதிலளிக்கையில் அமைச்சர் மேற்கண்டவாறு கூறினார்:

எஸ். ஜே. ராமசாமி (கழகம்): 1975-76-ம் ஆண்டு வேலூரில் உள்ள கூட்டுறவு மத்திய வங்கியின் தலைவர் மீது அறிஞர் அண்ணா அவர்களின் சிலை வைப்பதற்கு டிக்கெட் போட்டு முறைகேடாக வசூல் செய்தார் என்பது பற்றி அரசாங்கத்திற்கு புகார் ஏதேனும் வந்ததா? ஆம் எனில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது

அமைச்சர் எட்மண்ட்: ஆம். இதுபற்றி தனி விசாரணைக் குழு அரசின் கவனத்திற்கு கொண்டு வந்தது. கூட்டுறவு சங்கப் பதிவாளர் மேற்கொண்டு புலனாய்வுக்கும், குற்றவாளிகள் மீது வழக்குத் தொடரவும் காவல்துறையினரிடம் இதை ஒப்படைத்தார்.

இது சம்பந்தமாக வங்கியின் முன்னாள் தலைவர் மற்றும் 8 நபர்கள் மீதான புகார் காவல்துறை வர்த்தக குற்ற புலனாய்வுப் பிரிவு குற்ற புலனாய்வுத் துறையிடம் தாக்கல் செய்யப்பட்டு புலன் விசாரணையில் உள்ளது.

எஸ். ஜே. ராமசாமி: அண்ணா சிலை அமைக்க அந்த வங்கி சார்பில் எவ்வளவு தொகை வசூல் செய்யப்பட்டது.

அமைச்சர் எட்மண்ட்: வடஆற்காடு மாவட்ட மத்திய வங்கி ரூபாய் 5, 10, 15, 25, 50 ஆகிய டிக்கெட்டுகளை 1 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய்க்கு அச்சடித்தது. ஆனால் ஒழுங்கான கணக்கு விவரம் அரசுக்கு வரவில்லை.

எஸ். ஜே. ராமசாமி: அந்த டிக்கெட் வசூலில் வங்கி ஊழியர்கள் ஈடுபட்டனரா? எத்தனை பேர்? அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டதா?

அமைச்சர் எட்மண்ட்: வங்கி ஊழியர்கள் ஈடுபட்டது உண்மை. அவர்கள் யார் யார் என்ற விவரம் புலன் விசாரணையில் இருக்கிறது.

வரதராசன் (மார்க்சிஸ்ட்): இப்படிப்பட்ட மோசடிகள் தடுத்து நிறுத்தப்படுமா?

அமைச்சர் எட்மண்ட்: புதுதாக ஏற்பட்டிருக்கும் இந்த அரசு பொதுக் காரியங்களுக்கு அரசு ஊழியர்களை பயன்படுத்தக்கூடாது என்று கண்டிப்பாக உத்தரவு பிறப்பித்துள்ளது.

எஸ். ஜே. ராமசாமி: அந்தத்தலைவர் எத்தனை ஆண்டு பதவியில் இருந்தார்.

அமைச்சர்: அவரது பெயர் எம். பி. வடிவேலு எத்தனை ஆண்டு தலைவராக இருந்தார் என்பது பற்றி குறிப்பு இல்லை. குற்றச்சாட்டு அரசுக்கு வந்ததும் அவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார்.

அம்பிகாபதி (கம்யூ.): அந்தத்தலைவர் மீது வழக்கு இருக்கிறதா? கைது செய்யப்பட்டாரா?

அமைச்சர்: வழக்குப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. விசாரணை நடந்து வருகிறது. கைது பற்றி தகவல் இல்லை.

---

### கே. வி. கந்தசாமி பேச்சு

## எளிய மக்களுக்கு புனர்வாழ்வு அளிக்கும் பட்ஜெட்

சென்னை, ஆக. 2—கழக அரசின் பட்ஜெட் சமுதாயத்தின் அடித்தள - ஏழை எளிய மக்களுக்கு புனர் வாழ்வு அளிக்கும் பட்ஜெட் என்று கழக உறுப்பினர் கே. வி. கந்தசாமி பேசினார்.

நிதி நிலை அறிக்கை மீதான விவாதத்தில் கழக உறுப்பினர் கே. வி. கந்தசாமி (கிணத்துக்கடவு) பேசியதாவது:

என். ஜி. ஓக்களுக்கு ஊதிய உயர்வு கொடுக்கப்பட்டும், பணியிலிருந்து ஓய்வு பெறும்பொழுது ரூபாய் 10 ஆயிரம் பெறுவதற்கும் இந்த அரசு வழிவகை செய்திருப்பதும் மிகச்சிறந்த அம்சங்களாகும் இதை மனமார பாராட்டுகிறேன்.

கிராமப் பகுதிகளில் துணையற்ற நிர்க்கதியான மனைவர்களுக்கு வேலை வாய்ப்பளித்து கிராமக் குடும்பங்களின் வருவாயை உயர்ந்த வழிவகைச்செய்துள்ளது. குறை சொல்வதையேநோக்கமாக உடையவர்களுக்கும், உள்நோக்கம் உள்ளவர்களுக்கும் இந்த பட்ஜெட் திருப்தி அளிக்காமல் இருக்கலாம். ஆனால் சமுதாயத்தின் அடித்தளத்தில் உள்ள ஏழை எளிய மக்களின் புனர் வாழ்வுக்கு இப்புதிய பட்ஜெட் வழிவகை செய்கிறது.

கோவையில் மாநில மாநாடு நடத்தியபோது கிணத்துக்கடவு சட்டமன்ற தொகுதியில் பரம்பிக்குளம் ஆளியாறு திட்டத்திலிருந்து ஐக்காரர் பாளையம், வடசித்தூர் கோதவாடி வழியாக ஒரு கிளைவாய்க்காலும் ஆச்சிப்பட்டி, பொன்னையர் நல்லிக்கவுண்டன் பாளையம் வழியாக ஒரு கிளை வாய்க்காலும் வெட்டித் தருகிறோம் என உறுதியளித்து சிறிய பெரிய விவசாயிகளிடமிருந்து விழாக் கொண்டாட நிதி வசூலித்தனர் அந்த திட்டம் இதுகாறும் நிறைவேற்றப்படாமல் உள்ளது

அந்த திட்டத்தை இப் புதிய அரசு நிறைவேற்ற வேண்டும். எதிர்க்கட்சிக் காரர்கள் எதிர்த்து பேச வேண்டும் என்ற நோக்கத்தில் பேசுகிறார்கள். ஒரு மாதகால ஆட்சியில் இத்தகைய நல்ல பட்ஜெட்டைத் தயாரித்ததை எல்லோரும் புகழ்வது போல அவர்களும் கூறி இருந்தால் வரவேற்கத் தக்கதாக இருந்திருக்கும்.

பொள்ளாச்சி பகுதியில் சுமார் 130 அரிசி ஆலைகள் கடந்த ஓன்றரை ஆண்டு காலமாக ஓடாமல், செயல்படாமல் இருக்கின்றன. இந்த 130 ஆலைகளிலும் கிட்டத்தட்ட 2000 பேர் தொழிலாளர்கள் கூலி வேலைசெய்துவந்தார்கள். இவர்கள் எல்லாம் இன்றைக்கு எந்தவிதமான வேலையும் இல்லாமல இருக்கிறார்கள்

இந்த 130 ஆலைகளையும் மீண்டும் திறந்து நடத்துவதற்கு ஏதாவதுஒருவழியில் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்

இவ்வாறு கே. வி. கந்தசாமி பேசினார்

---

## புரட்சித்தலைவர் படித்த பள்ளியில் படத்திறப்பு: முனு ஆதி பங்கேற்பு

குடந்தை, ஆக. 2—முதல்வர் புரட்சித்தலைவர் படித்த யானையடி தொடக்கப் பள்ளியில் அவருடைய படத்தை சபாநாயகர் முனு ஆதி திறந்துவைத்தார்.

நேற்று முன்தினம் காலையில் குடந்தைக்கு வந்த சபாநாயகர் முனு ஆதிக்கு ரயில் நிலையத்தில் மேளதாளம், பாண்டுவாத்தியம் முழங்க சிறப்பான வரவேற்பு கொடுக்கப்பட்டது.

குடந்தை சட்டமன்ற உறுப்பினர் எஸ். ஆர். ராதா மாவட்ட அனைத்திந்திய அண்ணா தி.மு. கழக அமைப்பாளர் கே. வி. நாராயணசாமி, நகர அமைப்பாளர் வெங்கடேசன், வக்கீல் பாலன் புலவர் பழனிச்சாமி எஸ். ஆர். சி. சுப்பராயன். சர்புதீன், விஜயராகவன். திருநாவுக்கரசு, கலையரசன் மற்றும் ஏராளமானவர்கள் மாலை அணிவித்து வரவேற்றனர்.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகக் கிளைகள், எம். ஜி. ஆர். மன்றங்கள் சார்பில் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

காலையில் முதல்வர் புரட்சித்தலைவர் படித்த குடந்தை யானையடி தொடக்கப்பள்ளியில் அவரது படத்தை சபாநாயகர் முனு ஆதி திறந்து வைத்தார்.

பின்னர் குடந்தைபேட்டையில் உயர்நிலைப் பள்ளியில் முனு ஆதிக்கு வரவேற்புக் கொடுக்கப்பட்டது.

மாலையில் ஏ. ஆர். ஆர். ஆங்கில சிறுவர் பள்ளிக் கட்டிடத்தில் தஞ்சை மாவட்ட சிறு தொழில் சங்கத்தின் சார்பில் முனு ஆதிக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது. கொரநாட்டு கருப்பூர் பஞ்சாயத்து சார்பிலும் வரவேற்பளிக்கப்பட்டது.

குடந்தை புதுரோட்டில் உள்ள கிர்லோஸ்கர் நிறுவன புதிய காட்சி அறையை சபாநாயகர் முனு ஆதி திறந்து வைத்தார்.

மாலையில் ஏ. ஆர். ஆர். சாலையில் பொது மக்கள் சார்பில் சபாநாயகருக்கு வரவேற்பளிக்கப்பட்டது.

இந்த விழாக்களில் எஸ். ஆர். ராதா, எம். எல். ஏ., மாவட்டக் கழக அமைப்பாளர் கோவி. நாராயணசாமி ஆகியோர் கலந்துகொண்டனர்.

---

## மின்சாரத் திருட்டை தடுக்க உயர்மட்ட அதிகாரிகள் யோசனை

கோவை, ஆக. 2—கோவை மாவட்டத்தில் மின்சாரத் திருட்டு, மின்சார சாதனங்கள் ஆகியவை திருட்டுப் போவதை நிறுத்த உயர் அதிகாரிகள் ஆலோசனை நடத்தினர்கள்.

தமிழ்நாடு மின்சார இலாகா பாதுகாப்பு மற்றும் விசேஷபிரிவு உயர் அதிகாரி திருச்சிற்றம்பலம் நேற்று கோவைக்கு வந்தார்.

கோவையில் உள்ள உதவி போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் அலுவலகத்தில் உயர்மட்ட அதிகாரிகள் கூட்டம் நடைபெற்றது. திருச்சிற்றம்பலமும் கலந்து கொண்டார்.

மாவட்ட போலீஸ் அதிகாரிகள் பி. எஸ். டஞ்சாபகேசன். நெயில்வால. மின்சார இலாகாவைச்சேர்ந்த உயர் மட்ட அதிகாரிகளும் எஞ்சினியர்களும் கலந்து கொண்டனர்.

இக்கூட்டத்தில் கிராம நகரப்புறங்களிலும் மின்சாரமும், மின்சார சாதனங்களும் எப்படி திருட்டுப் போகின்றன. இதைத் தடுக்க மின்சார இலாகாவும், போலீஸ் இலாகாவும் எப்படி செயல்படுவது பொதுமக்களின் ஒத்துழைப்புடன் திருட்டை எப்படி அறவே ஒழிப்பது என்பதுபற்றி தீவிர ஆலோசனை செய்யப்பட்டதாக உதவி போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஹண்டா கூறினார்.

---

### நீக்கப்பட்ட

## அண்ணா படம் வைக்க வேண்டும்

சென்னை, ஆக. 2— தமிழகத்தில் கவர்னர் ஆட்சியின்போது நாடு முழுவதும் பல அரசு அலுவலகங்களில் இருந்து அறிஞர் அண்ணாவின் படங்கள் நீக்கப்பட்டன. அவ்வாறு நீக்கப்பட்ட இடங்களில் ஒன்றான குந்தா மின் நிலையங்களில் அகற்றப்பட்ட படங்களை மீண்டும் வைக்குமாறு அமைச்சர்கள் குழந்தைவேலு. பண்ருட்டி ராமச்சந்திரன் ஆகியோரிடம் எமரால்டு கே. மணி மனு கொடுத்தார்.

---

## சென்னை - டெல்லி நேரடி விமானம்: புரட்சித்தலைவர் கோரிக்கை ஏற்பு

புதுடெல்லி, ஆக. 2— சென்னைக்கும் டெல்லிக்கும் இடையே தினசரி ஏதாவது ஒரு விமானத்தை நேரடியாக விடுவது பற்றி அரசு சாதகமான முறையில் பரிசீலிக்கும் என்று மத்திய விமானப் போக்குவரத்துத்துறை அமைச்சர் புருஷோத்தம் கவுஷிக் கூறினார்.

இப்போது சென்னையிலிருந்து—டெல்லிக்கும் டெல்லியிலிருந்து—சென்னைக்கும் வரும் விமானங்கள் ஐதராபாத்தில் இறங்கிவருகின்றன. இதனால் ஏற்படும் காலதாமதத்தைத் தவிர்க்க நேரடி விமானப் போக்குவரத்து வேண்டும் என்று புரட்சித்தலைவர் கோரியது நினைவிருக்கலாம்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவரின் கோரிக்கையை வலியுறுத்தும் முறையில் மத்திய விமானப் போக்குவரத்து அமைச்சர் புருஷோத்தம கவுஷிக்கிடம் தென்னக நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஒரு மனு கொடுத்தனர்.

சென்னைக்கும்-டெல்லிக்கும் நேரடி விமானப் போக்குவரத்து வேண்டும் என்று அவர்கள் தங்கள் மனுவில் கோரியிருந்தனர்.

இந்தமனுவை நாடாளுமன்ற அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகக் கொறடா ஆலடி அருணா செயலாளர் பி. கண்ணன் ஆகியோர் அமைச்சரிடம் சமர்ப்பித்தனர். இந்த மனுவில் தென்னகத்தைச்சேர்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்கள் கையெழுத்துப் போட்டிருக்கிறார்கள்.

சென்னையிலிருந்துடெல்லிக்கும்-டெல்லியிலிருந்து சென்னைக்கும் வரும் ஏதாவது ஒரு விமானம் இடையில் எந்த நகரத்திலும் இறங்காதுநேரடியாகப் பறந்து செல்லஏற்பாடுசெய்திருக்கிறோம். இதுபற்றி சாதகமான முறையில் அரசு பரிசீலிக்கும் என்று மத்திய விமானப் போக்குவரத்து அமைச்சர் புருஷோத்தம கவுஷிக் கூறினார்.

---

## மது கடத்துவதை தடுக்க புது ஏற்பாடு

கோவை, ஆக. 2— மது கடத்தல் பற்றி தகவல் தர புது ஏற்பாடு ஒன்றைகோவை மாவட்ட கலெக்டர் நரசிம்மன்செய்துள்ளார்.

தமிழ்நாட்டில் மது விலக்கை தீவிரமாக அமல் நடத்துவதென்று கழக அரசு அறிவித்துள்ளது. மது கடத்தல் காய்ச்சுதல், விற்றல், குடித்தல் ஆகியவற்றைப் பற்றி பொதுமக்கள் தகவல் தருவதற்கு விசேஷ ஏற்பாடுகள் செய்திருப்பதாகவும் பொதுமக்களின் தகவல்கள் ரகசியமாக வைக்கப்படும் என்று மாவட்ட கலெக்டர் அறிவித்தார்



### விற்பனையாளர்கள் கவனத்திற்கு

விற்பனையாளர்கள் அனைவருக்கும் ஜூலைமாத பட்டியல் அனுப்பப்பட்டுள்ளது. பட்டியல் தொகையினை உடன் பாக்கியின்றி அனுப்பி வைக்க வேண்டும்.

தொகையினை அனுப்பாத விற்பனையாளர்களுக்கு பிரதிகள் அனுப்புவது முன்னறிவிப்பின்றி நிறுத்தப்படும் என்பதனைத் தெரிவித்துக்கொள்கிறோம்,

சர்க்குலேஷன் மானேஜர்
"அண்ணா"

# அண்ணா

**சந்தா விவரம்**

1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30
3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது;

நிர்வாகி
"அண்ணா"
156, லாயிட்ஸ் சாலை, சென்னை-600014.

மத்திய அரசு அலுவலகங்களில்

# அரிஜனங்களுக்கு வேலை வாய்ப்பு குறைவது ஏன்? ஏ. முருகேசன் கண்டனம்

புதுடெல்லி, ஆக. 2— "மத்திய அரசு அலுவலகங்களில் அரிஜனங்களுக்கு வேலை வாய்ப்பு குறைந்து வருகிறது என்று நாடாளுமன்றத்தில் கழக உறுப்பினர் ஏ. முருகேசன் கூறினர்.

அரிஜனங்கள், பழங்குடி தாழ்த்தப்பட்ட மக்கள் நல வாழ்வு கமிஷனரின் ஆண்டறிக்கை மீது நாடாளுமன்றத்தில் நடந்த விவாதத்தில் கலந்து கொண்டு ஏ. முருகேசன் பேசியதாவது:

மத்திய அரசு அலுவலகங்களில் கடந்த ஆண்டைவிட இந்த ஆண்டு அரிஜனங்களுக்கு குறைவாக வேலை வாய்ப்பு கிடைத்திருக்கிறது என்பதை அரசின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்; இதற்கான காரணங்களை விளக்கவேண்டுகிறேன்;

வேலை வாய்ப்புக்களில் 15 சதவீதம் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் ஏழரை சதவீதம் பழங்குடி மக்களுக்கும் ஒதுக்கீடு செய்வது என்ற மத்திய அரசின் விதியை சரிவர கடைப்பிடிக்க வேண்டும்

சட்ட ரீதியான சலுகைகள் வழங்கப்படவில்லை; அந்த குறிப்பிட்ட ஜாதி டெல்லி பிரதேச அரசின் அறிக்கையில் இல்லாததே காரணம்; இது போன்ற குறைகளை களைய வேண்டும்;

## மாணவர்கள் குறைவதேன்?

பல்கலைக்கழகங்களில் தாழ்த்தப்பட்ட பழங்குடி இனத்தைச் சேர்ந்தவர்களுக்கு 20 சதவீத இடங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்பது விதி; நம்நாட்டில் உள்ள 110 பல்கலைக்கழகங்களில் அறுபத்து ஐந்தில் இந்த விதி கடைப்பிடிக்கப்படவில்லை.

அதைப்போலவே பல்கலைக்கழகங்களில் தாழ்த்தப்பட்ட மாணவர்களை சேர்ப்பதில் மதிப்பெண்களில் 5 சதவீதம் சலுகைகாட்டப்படவேண்டும் என்ற விதியையும் கடைப்பிடிப்பதில்லை; இது போன்ற சூழ்நிலை இருப்பதால்தான் அரசுப்பணிகளில் தாழ்த்தப்பட்ட மக்கள் போதிய எண்ணிக்கையில் சேர வாய்ப்பு இல்லை;

எனவே தான் கல்வி மந்திரி "தாழ்த்தப்பட்ட இனத்தவர் அவர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட மேல்வகுப்புகளில் சேருவதில்லை. அப்படியே சேர்ந்தாலும் சரிவர படிப்பதில்லை" என்று குறிப்பிட்டார்;

இதுபற்றி கல்வி மந்திரிக்கு இரு கோரிக்கைகளை நான் விடுக்கிறேன். விடுமுறை நாட்களில் தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கு விசேஷ பாடபோதனை அளிக்க வேண்டும். தாழ்த்தப்பட்ட மாணவர்கள் விஷயத்தில் அரசு விதிகளை கடைப்பிடிக்காத பல்கலைக்கழகங்களுக்கு அரசு மானியம் வழங்குவதை நிறுத்திவிடவேண்டும்; மேற்கண்ட இரு நடவடிக்கைகளையும் கல்வி மந்திரி செயல்படுத்த வேண்டும்;

நாடு முழுவதிலும் தாழ்த்தப்பட்ட இனத்தினரும், மலை ஜாதியினரும் பரவிக் கிடப்பதால் அவர்களின் நலவாழ்வுக்கு ஒரு கமிஷனர் போதாது. ஒரு கமிஷனர்களை நியமிக்கக் கோருகிறேன்.

புத்த மதத்தை கடைப்பிடிக்கும் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு சலுகைகள் வழங்கப்படாமல் இருப்பது சரியல்ல [illegible] புத்தமதமும் நம்நாட்டில் [illegible] அவர்களுக்கு சலுகைகள் [illegible] தமிழ்நாட்டிலிருந்து [illegible] பணிபுரியும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு

## கவர்னர்

வெளிநாட்டுத் தூதர் பதவிகளில் தாழ்த்தப்பட்டவர்களுக்கு வாய்ப்பு தருவதில்லை. சமீபத்தில் ஜனதா அரசு நான்கு புதிய கவர்னர்களை நியமித்தது. அவர்களில் ஒருவர் கூட தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர் இல்லை நாடாளுமன்றத்துக்கு தாழ்த்தப்பட்ட இனத்தவருக்கு குறிப்பிட்ட இடங்கள் ஒதுக்குவதைப்போல மாநிலங்களவைக்கும் ஒதுக்க வேண்டும்.

ஒருநாளைக்கு 92 பைசா வருமானமுள்ளவர்கள் வாழ்வா சாவா என்று போராடும் அடிமட்டத்தில் உள்ள 12 கோடி மக்களின் குறைந்தபட்ச தேவைகளை பூர்த்திசெய்ய தாழ்த்தப்பட்ட இன மக்களின் நல்வாழ்வுக்காக பார்லிமெண்டரி கமிட்டி அறிக்கையின் திட்டங்களை நிறைவேற்றிடவேண்டும்.

இவ்வாறு ஏ. முருகேசன் கூறினர்.

திருவல்லிக்கேணி நாகப்பையர் தெருவில் மத்திய சென்னை நாடாளுமன்ற எம்.ஜி.ஆர். மன்றத்தின் சார்பில் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில் முசிறிபுத்தன் எம். எல். ஏ.வுக்கு பாராட்டு பத்திரம் வழங்கப்படுகிறது;

ஆவடியில்

## கழகத் தோழர் மீது தாக்குதல்

சென்னை, ஆக 2— சென்னை ஆவடி காமராச நகர் பகுதியில் நமது கழகத் தோழர் ஏழுமலையை வன்முறையாளர்கள் வகாப் தலைமையில் சூழ்ந்துகொண்டு கத்தியால் தாக்கினர்: அரசியல் முன் விரோதம் காரணமாக தாக்கப்பட்ட கழகத் தோழர் மருத்துவமனைக்குச் சென்று சிகிச்சைப் பெற்றார்.

இதுகுறித்து ஆவடி காவல் நிலையத்தில் புரட்சித் தலைவர் எம் ஜி ஆர் மன்றச் செயலாளர் மணி மனோகரன் புகார் செய்துள்ளார்.

தென்னிந்திய திரைப்பட வர்த்தக சங்கத்தின் புதிய தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும் டி. வி. எஸ். ராஜு.

## ஆசிரியர்கள் ஒற்றுமை மாநாட்டில் அரங்கநாயகம் வற்புறுத்தல்

சென்னை, ஆக. 2— ஆசிரியர்கள் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்று ஆசிரியர்கள் மாநாட்டில் கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் வலியுறுத்தினர்.

சென்னை பெரியார் திடலில் நடைபெற்ற ஆசிரியர்கள் மாநாட்டின் இரண்டாவது நாள் நிகழ்ச்சியில் கலந்து கொண்ட கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் கூறியதாவது:

ஆசிரியர்கள் கோரிக்கைகளில் செலுத்தும் கவனத்தைப் போலவே ஒற்றுமையிலும் கவனம் செலுத்த வேண்டும். உங்களுக்கிடையே இருக்கும் குழப்பத்தைக் கண்டு நான் வேதனைப்படுகிறேன். இத்தகைய குழப்பங்கள் இல்லாமல் நீங்கள் செயல்படுவது என்பது கடினமானதல்ல.

பட்ஜெட் கூட்டம் நடந்து கொண்டிருக்கும் போது உங்கள் கோரிக்கைகளின் மீது எதுவும் அறிவிக்க முடியாதவனாக உள்ளேன். என்றாலும் ஆசிரியர்களின் உரிமைக்கும் அந்தஸ்து உயரவும் பாடுபடுவேன்.

இவ்வாறு செ. அரங்கநாயகம் கூறினர்.

மாநாட்டில் கலந்து கொண்ட உள்ளாட்சித் துறை அமைச்சர் கா. காளிமுத்து பேசும் போது குறிப்பிட்டதாவது:

ஆசிரியர் கூட்டணி இயக்கம் வளரவேண்டும் வலிவு பெறவேண்டும் அதற்கு ஆசிரியர் கூட்டணி பிளவுபடாமல் ஒன்றுபட்டு இருக்கவேண்டும் ஆசிரியர்களுக்கு மிக மிக அவசியமானது ஒற்றுமையே ஆசிரியர்களின் கோரிக்கைகளை விரைவில் பரிசீலித்து ஆவன செய்யப்படும் என்று கா. காளிமுத்து கூறினர்.

இரண்டாவது நாள் மாநாட்டிலும் பெரியார் திடல் முன்பு தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணியினர் மறியல் ஆர்ப்பாட்டம் நடத்தினர். இரண்டாவது நாள் ஆர்ப்பாட்டத்தில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் கலந்து கொண்டனர்.

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணி பொதுச் செயலாளர் சு. ஈசுவரன் தலைமையில் நடைபெற்ற இம்மறியல் போராட்டத்தில் யாரும் கைது செய்யப்படவில்லை.

ஆசிரியர் கூட்டணி மாநிலத் தலைவர் ஜே. எஸ். இராசு, பொதுச் செயலாளர் சு. ஈசுவரன் பொருளாளர் ச. அப்துல் மஜீத்; தஞ்சை மாவட்ட செயலாளர் சு. அப்பாவு, செங்கற்பட்டு மாவட்ட செயலாளர் து. இளங்கோ திருச்சி மாவட்ட செயலாளர் க. ந. இராசு; புதுக்கோட்டை செயலாளர் செல்லையா ஆகியோர் ஆர்ப்பாட்டத்தில் பங்கேற்றனர்.

மாநாட்டுக்கு வந்திருந்த முத்துசாமி ஆதரவாளரான திருப்பத்தூர் இணை அமைப்பாளர் சாமு வச்சிரவேலன், அவருடன் வந்த ஆசிரியர்கள் அந்த அணியிலிருந்து விலகி, தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணியின் மாநிலத் தலைவர் ஜே. எஸ். இராசு பொது செயலாளர் சு. ஈஸ்வரன் முன்னிலையில் சேர்ந்தனர்.

உண்மைகள் மறைக்கப்பட்டு நாங்கள் முத்துசாமியால் ஏமாற்றப்பட்டு விட்டோம். கோர்ட் தடைவிதித்திருப்பதெல்லாம் இங்கு வந்த பின்புதான் தெரியும். போலிகளுக்கு ஆசிரியர் சமுதாயத்தின் ஆதரவு இருக்காது என்று இம்மாநாடு தெளிவுபடுத்தி விட்டது. எனவே நானும் என்னுடன் வந்துள்ள ஆசிரியர்களும் உண்மை இயக்கமான ஆசிரியர் கூட்டணியில் ஜே. எஸ். இராசு, சு. ஈசுவரன் தலைமையில் செயல்பட இணைகிறோம் என்று திருப்பத்தூர் இணை அமைப்பாளர் சாமு வச்சிரவேலன் தெரிவித்தார்.

## பாடி விவகாரம் என்ன? மார்க்சிஸ்ட் தலைவர் ராமமூர்த்தி அறிக்கை

சென்னை, ஆக. 2—பாடி சுந்தரம் கிளேட்டன் தொழிற்சாலையில் தொழிலாளர்களுக்கும் நிர்வாகத்தினருக்கும் இடையே உள்ள விவகாரம் குறித்து மார்க்சிஸ்டு தலைவர் பி. ராமமூர்த்தி எம். பி. ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார்.

அந்த அறிக்கையில் பி. ராமமூர்த்தி கூறியிருப்பதாவது:

"1976-ம் ஆண்டில் தொழிலாளர்கள் மீது அசாதாரண வேலைப்பளு சுமத்தப்பட்டது தான் சுந்தரம் கிளேட்டன் தொழிற்சாலையில் தகராறு ஏற்பட்டதற்கு மூல காரணம்.

1975 செப்டம்பரில் சம்பளஉயர்வு கையெழுத்தானது. அதன் பின்னர் நிர்வாகம் தன்னிச்சையாக வேலைப் பளுவை தொழிலாளர்கள் மீது சுமத்தியது.

நாடாளுமன்றத் தேர்தல் முடிந்து மத்தியில் புதிய அரசு பொறுப்பேற்ற பின்னர் மெதுவாக வேலை செய்வது என்று தொழிலாளர்கள் முடிவெடுத்தனர்; வேலைப்பளு அதிகரிப்பதை யாரும் மறுக்கவில்லை; ஆனால் வேலைப்பளு உற்பத்தித்திறன் குறித்து தொழிற்சங்கமும், நிர்வாகமும் கலந்து பேசி முடிவெடுக்க வேண்டும் அல்லது தேசிய உற்பத்தித் திறன் குழு பரிந்துரையின்படி தீர்மானிக்கலாம் என்று தொழிற்சங்கம் கருத்துத் தெரிவித்தது.

தேசிய உற்பத்தித்திறன் குழு தனது தீர்மானத்தை அமுல்படுத்துகையில் 1975-ம் ஆண்டின்போது செய்த சம்பள நிர்ணயத்தின்படி உற்பத்தித்திறன் அமைய வேண்டும் என்று தொழிற்சங்கம் கூறியது;

1976-ல் தீர்மானித்தபடி உற்பத்தி செய்யவேண்டும் என்று தொழிலாளர்களை யூனியன் கேட்டுக் கொண்டது.

எனினும் 1975-ம் ஆண்டு குறிப்பிட்ட உற்பத்தி அளவை எட்டிய தொழிலாளிக்கு அவர் தொடர்ந்து வேலை (உற்பத்தி) செய்ய முடியாமற் போனால் தண்டனை வழங்கக்கூடாது என்றும் யூனியன் கோரியது.

மத்திய தொழிலாளர்

(6-ம் பக்கம் பார்க்க)

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

நல மந்திரி, தொழில் மந்திரி, தமிழ்நாடு முதலமைச்சர் ஆகியோர் தொழிற்சங்க கோரிக்கைகளை நியாயம் என்று கருதினார்கள்; ஆனால் நிர்வாகமோ நியாயமற்றது என்பதோடு ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது என்றும் கூறிவிட்டது.

பாடி சுந்தரம் கிளேட்டன் தொழிற்சாலையைப் பொறுத்தவரையில் தொழிற்சங்க உட்பூசல் இல்லை. ஏனெனில் இங்கு ஒரே ஒரு தொழிற்சங்கம் தான் உள்ளது.

கடந்த தொழிற்சங்கத் தேர்தலில் ஐ. என். டி. யூ. சி. தலைவர் எஸ். எம். நாராயணனின் தலைமையைப் புறக்கணித்த தொழிலாளர்கள் ஒரு தொழிலாளியை தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். தொழிலாளர் தலைவரால் நிர்வாகத்திடம் சுடுகொடுக்க முடியாமல் போனதால் அவர் ராஜினாமா செய்துவிட்டார். தொழிற்சங்க சட்டவிதிகளின்படி வி. பி. சிந்தன் கூட்டுத் தலைவரானார். ஆனால் நிர்வாகம் அந்தனை விரும்பவில்லை.

இவ்வாறு பி. ராமமூர்த்தி கூறியிருக்கிறார்.

## செப்டம்பர் முதல் ஏழைகளுக்கு இலவச சட்ட உதவி கிடைக்கும்

சேலம், ஆக. 2— தமிழ்நாட்டில் ஏழை மக்களுக்கு இலவச சட்ட உதவி அளிக்கும் திட்டம் அடுத்த மாதம் (செப்டம்பர்) முதற் கொண்டு அமலுக்கு வருகிறது என்று பிரதம நீதிபதி கோவிந்தன்நாயர் அறிவித்தார்.

வழக்குகளில் சொந்தமாக வக்கீல் வைத்து வாதாட முடியாத ஏழை மக்களுக்கு இலவசமாக வக்கீல் வைத்துக் கொடுக்கும் திட்டம் ஒன்றை தமிழ்நாடு அரசு தீட்டியுள்ளது.

சென்னை உயர்நீதிமன்ற பிரதம நீதிபதி பி. கோவிந்தன் நாயர் இது பற்றி கூறியதாவது:

இந்த வசதி அடுத்த (செப்டம்பர்) மாதம் கிடைக்கும். இதற்கான கமிட்டிகள் அமைக்கப்பட்டு விடும். எல்லா மாவட்டங்களிலும் தாலுகா அளவில் அமைக்கப்படும்.

சென்னை உயர்நீதிமன்றத்தில் தேங்கிக் கிடக்கும் வழக்குகளை விசாரித்து முடிக்க போதுமான நீதிபதிகளை நியமிக்கும்படி அரசுக்கு எழுதியிருக்கிறேன்;

32 ஆயிரம் வழக்குகளும் 9 ஆயிரம் ரிட் மனுக்களும் தீர்க்கப்படாமல் உள்ளன என்று பிரதம நீதிபதி கோவிந்தன் நாயர் நிருபர்களிடம் குறிப்பிட்டார்.

PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF M/s. THANGAM NI PUBLICATIONS FROM 156, LLOYDS ROAD, MADRAS-14 AND PRINTED BY K. THANGARAJAN AT AV SAKTHI PRESS 60, KUTCHERY ROAD MADRAS-4.
EDITOR: M.G.CHAKKRAPANI

## பாண்டிச்சேரி அரசாங்கம்

பொதுப்பணிதுறை இலாகா பாண்டிச்சேரி

எண் 1231 /IP /DBII /10.15 /77

இந்தியக் குடியரசுத்தலைவர் அவர்கள் சார்பில் கீழ்கையொப்பமிட்டுள்ளவரால் தகுதி வாய்ந்த காண்ட்ராக்டர்களிடமிருந்து கீழ்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் வரவேற்கப்படுகின்றன;

| வரிசை எண் | வேலையின் பெயர் | அனுமானிக்கப்பட்ட உத்தேச செலவு | டேவணித் தொகை டிபாசிட் |
|---|---|---|---|
| 1. | கருவாடிக்குப்பத்திலுள்ள பிரதம நீரேற்று நிலையத்தில் (PUMPING STATION) பம்ப் ஆபரேட்டர்களுக்கான குடியிருப்புகள் கட்டுதல். | ரூ: 35,622- | ரூ: 891- |
| 2. | மத்திய நீரேற்றுநிலையத்தில் பம்ப் ஆபரேட்டர்களுக்கான குடியிருப்புகள் கட்டுதல். | ரூ: 30,358- | ரூ. 759- |
| 3. | லாஸ்பெட்டில் உள்ள கழிவுநீர் பண்ணைக்கு பம்ப் ஆபரேட்டர்களுக்கான குடியிருப்புகள் கட்டுதல். | ரூ: 31667- | ரூ: 792- |

டெண்டர்கள், இணை இயக்குனர்- நிர்வாகப் பொறியாளர் II, பொதுப்பணித்துறை, பாண்டிச்சேரி, அவர்களால் 26-8-77 பிற்பகல் 3-30 மணிக்குள் பெற்றுக்கொள்ளப்பட்டு, மாலை 4.00 மணிக்கு திறக்கப்படும். டெண்டர் பாரங்கள் மற்றும் ஒப்பந்த நிபந்தனைகள் ஆகியவை, 24-8-77 மாலை 5 மணி வரை, உதவிப்பொறியாளர் அலுவலகம், பாதாள சாக்கடை திட்டம் (Drainage) பொதுப் பணித்துறை, பாண்டிச்சேரி, அலுவலகத்தில், ஒவ்வொரு வேலைக்கும், ரூ. 20- (ரூபாய் இருபது மட்டும்) மற்றும் விற்பனை வரி சேர்த்து செலுத்தி பெற்றுக்கொள்ளலாம்.

குறிப்பிட்ட வகையில் டேவணித் தொகை டிபாசிட் செலுத்தாத காண்ட்ராக்டர்களின் டெண்டர்கள், கண்டிப்பாக நிராகரிக்கப்படும்.

எம். என். ராதாகிருஷ்ணன்,
இணை இயக்குனர்- நிர்வாகப் பொறியாளர் II